REGD. NO. M. 6311 ★ தனி இதழ் 0—1—0 ★ இலங்கையில் 10 சதம் ★ PHONE: 55630

# நம் நாடு

தி. மு. க. தின இதழ் ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்

The "Nam Nadu" A Tamil Daily. ★ The Official Organ Of The D.P.F.

**தி. மு. க. பெற்றுள்ள வெற்றி**
(16—3—57 நண்பகல்வரை)
★

| சட்டசபை: | மக்கள் சபை: |
|---|---|
| 9 | 4 |
| | (2 ஆதரவாளர்கள்) |

(பெற்றுள்ள மொத்த வாக்குகள்)

| சட்டசபை: | மக்கள் சபை: |
|---|---|
| 12,41,859 | 9,2306,6 |

மலர் 4] சென்னை: பங்குனி 3௳ சனி (16—3—57) ★ ★ வெளியூர்: பங்குனி 4௳ ஞாயிறு (17—3—57) [இதழ் 238

# ஈ. வெ. கி. சம்பத் வெற்றி முழக்கம்

## 'தீர்க்கதரிசி'களும் சாபமிட்டோரும் தலைகுனியட்டும்--வெட்கப்படட்டும்

சென்னை, மார்ச் 16—

திராவிட முன்னேற்றக் கழக அபேட்சகர்களில் மேலும் மூவர் வெற்றிபெற்றிருக்கின்றனர் என்ற செய்தி அறிவிக்க பெருமகிழ்வெய்துகிறோம்.

'திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு ஒரு இடம்கூடக் கிடைக்காது' என்று ஆருடம் கணித்த 'தீர்க்கதரிசி'களும் 'கிடைக்கவிட மாட்டோம்' என்று 'சல்லடம்' கட்டியவர்களும் வெட்கப்படுவதற்குரிய வகையில், கழகத்தின் வெற்றிச் செய்திகள் அமைந்துள்ளன!

நாமக்கல் பாராளுமன்றத் தொகுதியிலிருந்து தோழர் ஈ. வெ. கி. சம்பத் அவர்கள் பெருவாரியான வாக்குகளால் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது கழகத்தின் குறிப்பிடத்தகுந்த வெற்றியாகும்.

நேற்றுவரை சட்டசபைத் தொகுதிகளில் வெற்றி பெற்றோர் எண்ணிக்கை ஏழாக இருந்தது, இப்போது ஒன்பதாக உயர்ந்திருக்கிறது!

இந்த இரு வெற்றிகளில் ஒன்று சென்னை-பெரம்பூர் தொகுதியிலிருந்தும் மற்றொன்று, வடஆற்காடு-வேலூர் தொகுதியிலிருந்தும் நமக்குக் கிடைத்திருப்பவையாகும்.

சேலம்-ஆத்தூர் இரட்டை உறுப்பினர் தொகுதியில், நமது அபேட்சகர்கள் இருவருமே வெற்றிபெற்றிருப்பதாகவும், ஆனால் முடிவுகள் இன்னும் அதிகாரபூர்வமாக அறிவிக்கப்படவில்லை என்றும் தெரிய வருகிறது.

★

## 'ஏக இந்தியா'க்களுக்குப் படுதோல்வி

### கழகத்திற்குப் பெருமை தரும் சாதனை

### 25,000 வாக்குகள் அதிகம் பெற்றார்

(டிரங்க் செய்தி)

நாமக்கல் பாராளுமன்றத் தொகுதியில் நமது கழக அபேட்சகராகப் போட்டியிட்ட தோழர் ஈ. வெ. கி. சம்பத் அவர்கள் மகத்தான வெற்றிபெற்றார் என்ற செய்தியறிவிக்க மட்டிலா மகிழ்வுறுகிறோம்.

பகல் 1 மணிக்கு 'டிரங்க் போன்' மூலம் தரப்பட்ட விபரப்படி தோழர் சம்பத் அவர்கள் சுமார் 25,000 வாக்குகள் காங்கிரஸ் அபேட்சகரைவிட அதிகம்பெற்று மகத்தான வெற்றிபெற்றுள்ளார்.

தோழர் சம்பத் அவர்களின் வெற்றி கழகத்திற்கு பெருமை தேடித்தந்த மகத்தான சாதனையாகும். தோழர் சம்பத்தின் வெற்றி 'ஏக இந்தியா'க்களுக்கு கிடைத்துள்ள மற்றுமோர் படுதோல்வியாகும்.

★



தேர்தலில் வெற்றி பெற்ற நாமக்கல் பாராளுமன்றத் தொகுதி நாமக்கல் தொகுதியேயாகும். இத்தொகுதி 8 சட்டசபைத் தொகுதிகளை உள்ளடக்கியதாகும். இந்தத் தொகுதியில் மொத்த வாக்காளர் எண்ணிக்கையும் சுமார் 8 இலட்சம் என்பது குறிப்பிடத்தக்கது.

## வேலூரில் கழகத்தின் வெற்றிக்கொடி!

### எம். பி. சாரதியை எதிர்த்து நின்ற காங்கிரஸ், கம்யூனிஸ்டு படுதோல்வி

வழக்கம்போல வட ஆற்காடு மாவட்டம் வேலூர், திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு தேர்தலிலும் நல்லாதரவைத் தந்து—கழக அபேட்சகருக்கு மகத்தான வெற்றி தேடித் தந்து தனது பெருமையை நிலைநாட்டிக் கொண்டிருக்கிறது.

இங்கு கழக அபேட்சகரான தோழர் எம். பி. சாரதி அவர்களை எதிர்த்துப்போட்டியிட்ட காங்கிரஸ், கம்யூனிஸ்டு கட்சி அபேட்சகர்கள் படுதோல்வியுற்றிருக்கின்றனர்.

தோழர் சாரதி அவர்களைத் தோற்கடிப்பதற்காக எல்லா 'அகில இந்தியா'க்களும் சகலரக கீழ்த்தரமான சட்ட விரோதமான முயற்சிகளையும் எடுத்துக் கொண்டனர் என்றாலும், அவர்கள் தோல்வி கண்டிருக்கின்றனர்!

தோழர் சாரதி அவர்களின் வெற்றி கழகத்திற்குக் கிடைத்துள்ள மற்றுமொரு பெருமைக்குரிய வெற்றியாகும்.

**வாக்கு விவரம்:**

| | |
|---|---|
| எம். பி. சாரதி | 18,520 |
| கே. ஆர். சுந்தர கவுண்டர் (கம்.): | 13,683 |
| வி. எம். இராமசாமி (காங்.): | 8,586 |
| செல்லாதவை | 15 |

## ஐ. நா. மத்தியஸ்தர்-பாக். தலைவர்கள் சந்திப்பு

### காஷ்மீர்பிரச்சினைகுறித்து சுராவர்த்தி விளக்கம்

கராச்சி, மார்ச் 15—

ஐ. நா. பாதுகாப்புச் சபையின் தலைவரும் சுவீடன் நாட்டுப் பிரதிநிதியும் காஷ்மீர் தகராறுக்கு பைசல்காண நியமிக்கப்பட்டுள்ளவருமான குன்னார் ஜாரிங், இன்று இங்கு பாகிஸ்தான் தலைவர்களுடன் இரண்டரை மணிநேரத்திற்கு அதிகமாகப் பேச்சுவார்த்தை நடத்தியிருக்கிறார் என்று தெரிகிறது.

பாக். பிரதமர் சுராவர்த்தி, வெளிநாட்டு மந்திரி பெரோஸ் நூன்கான், வெளிவிவகார இலாகா செயலாளர் எம். எஸ். ஏ. பெய்க் ஆகியோர் ஐ. நா. மத்தியஸ்தருடன் பேசியிருக்கின்றனர்.

சுராவர்த்தி, காஷ்மீர் பிரச்சினையை ஆதியோடந்தமாகப் பிரிவினை நடந்த நாளிலிருந்து இன்றுவரை விளக்கிக் கூறியிருக்கிறார்.

ஐ. நா. மத்தியஸ்தர் சில கேள்விகளைக் கேட்டதுடன், சில தஸ்தாவேஜுகளையும் படங்களையும் பரிசீலித்தார் என்றும் கூறப்படுகிறது.

## தற்போதைய சென்னை சட்டசபை கலையும் நாள்

சென்னை, மார்ச் 16—

தற்போதைய சென்னை சட்டசபை மார்ச் 31-ந் தேதி கலைக்கப்படும் என்றும், இம்மாத இறுதிக்குள் இது சம்பந்தமாக அரசாங்கத்தின் அறிக்கை வெளியிடப்படுமென்றும் தெரிகிறது.

## கழக வீராங்கனை மகத்தான வெற்றி!

### காங்கிரஸ், கம்யூனிஸ்டு, சோஷலிஸ்டு அபேட்சகர்களை தோழியர் சத்தியவாணிமுத்து தோற்கடித்தார்!



சென்னை-பெரம்பூர் தனித் தொகுதியில் தி. மு. க. அபேட்சகராகப் போட்டியிட்ட தோழியர் சத்தியவாணிமுத்து அவர்கள் மகத்தான வெற்றி பெற்றிருக்கிறார்.

தி. மு. கழகம் நிறுத்திவைத்த அபேட்சகர்களில் திருமதி சத்தியவாணிமுத்து அவர்கள் மட்டுமே பெண் அபேட்சகர்.

தி. மு. கழக மத்திய செயற்குழு உறுப்பினர்களில் ஒருவரும் மகளிர் மன்றத் தலைவியுமான சத்தியவாணிமுத்து அவர்களை எதிர்த்துப் போட்டியிட்ட காங்கிரஸ், சோஷலிஸ்டு, கம்யூனிஸ்டுக் கட்சி அபேட்சகர்கள் படுதோல்வியுற்றனர். குறிப்பாகக் கம்யூனிஸ்டு அபேட்சகர் பரிதாபத்திற்குரிய வகையில் ஜாமீன் தொகையைப் பறிகொடுத்திருக்கிறார்.

**வாக்குகளின் விவரம்:**

| | | |
|---|---|---|
| சத்தியவாணிமுத்து | ... | 27,638 |
| டி. இராசகோபால் (காங்) | ... | 23,682 |
| கே. பி. சாமுண்டீசுவரன் (சோஷி) | ... | 14,915 |
| பி. கருப்பண்ணன் (கம்) | ... | 3,968 |

**மு. கருணாநிதி** தொகுதியில் 17—3—57 அன்று குளித்தலையில் வாக்குகள் எண்ணப்படும்.

Best copy available.

நம் நாடு
தி.மு.க. தின இதழ் — ஆசிரியர் இரா. நெடுஞ்செழியன்
சென்னை 16—3—57 சனி

# ஆபத்துக்களை விலை கொடுத்து வாங்குவானேன்?

'சர்வதேசக் கம்யூனிசம்' என்ற பூச்சாண்டியைக் காட்டி, 'சீட்டோ'வுக்கு நியாயம் கற்பிக்க முயலுகிறார் டல்லஸ்!

'ஆங்கிலோ — அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் ஆக்கிரமிப்பு' என்ற பயத்தைக் காட்டி 'வார்சா'வுக்கு நியாயம் கூறுகிறார் குருஷ்சேவ்!

இப்படி இன்னும் 'செண்டோ' 'பாக்தாத்' போன்ற இராணுவ ஒப்பந்தங்களையும் வல்லரசுக் கோஷ்டிகள் மேற்கொண்டு பல சின்னஞ்சிறு நாடுகளைத் தங்கள் இராணுவ அரவணைப்பில் கொண்டுவந்துள்ளன!

தெரிந்தோ தெரியாமலோ நிர்ப்பந்தம் காரணமாகவோ, ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் உள்ள சில சின்னஞ்சிறு நாடுகள், இந்த வல்லரசுக் கோஷ்டிகளின் பிணைப்பில் தங்களை ஈடுபடுத்திக்கொண்டுள்ளன!

இந்த நிலை இருகோஷ்டியினரும் கூறுவது போன்று துளியும் உலகில் சமாதானத்திற்குப் பாதுகாப்புத்தேடித்தரப் பயன்படாது; மாறாக, சமாதானத்திற்கு உலைவைக்கும் தோற்றுவாய்களாகவே இந்த இராணுவக் கூட்டுகள் உருவெடுக்கும் என்பதில் சந்தேகமில்லை.

'சீட்டோ' கவுன்சில் கூட்டம் ஆஸ்திரேலியாவில் கான்பெர்ரா நகரில் நடைபெற்று முடிவுற்றிருக்கிறது; முடிவில் ஒப்பந்த நாடுகள் ஒரு அறிக்கையும் வெளியிட்டிருக்கின்றன.

இந்த அறிக்கை கூறுவதென்ன?

"உலக ஆதிக்கம் வகிக்க வேண்டும் என்ற தனது பேராசையை நிறைவேற்றிக்கொள்ள சர்வதேசக் கம்யூனிசம் இப்போது ஆயுத பலத்தை நம்பியிருக்கவில்லை; அந்த நிலை மறைந்துவிட்டது. தனது ஆசையைப் பூர்த்தி செய்ய அது இப்போது வேறு வழிகளைத் தேடிக்கொண்டது. எனவே, தென் கிழக்கு ஆசியாவில், சமாதானத்திற்கு இராணுவ ஆதிக்கமூலம் எந்தவித அச்சுறுத்தலும் இல்லை" என்கிறது, அந்த அறிக்கையின் ஒரு பகுதி.

தென்கிழக்கு ஆசியாவில் இப்போது கம்யூனிச ஆதிக்கப் பயம் இல்லை என்று ஒப்புக்கொள்கிறவர்கள், அந்த ஆதிக்கம் தோன்றினால் அதனைத் தடுக்க என்று கூறி அமைத்த 'சீட்டோ' நீடிக்கவேண்டுமென்று கூறுவது முரண்பட்ட பேச்சல்லவா? இதிலிருந்து, 'சர்வதேச கம்யூனிசம்' என்ற பூச்சாண்டியைக் காட்டி ஆங்கிலோ - அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள், ஆசியாவில் சில நாடுகளைத் தங்கள் கூடாரத்திற்கு இழுப்பதற்காகத்தான்— இழுத்து அவைகளைத் தங்களின் இராட்சத இராணுவ பலத்தால் பிணைப்பதற்காகத்தான் 'சீட்டோ' என்பது தெளிவாகவில்லையா?

தென்கிழக்கு ஆசிய நாடுகளுக்கு அப்படியே ஏதேனும் ஆபத்து நேரக்கூடுமானால் அவற்றை எதிர்த்துப் போராடக்கூடிய ஆற்றல் தங்களுக்குத்தான் இருக்கிறது என்று ஏன் தாங்களாகவே இந்த மேற்கு வல்லரசுகள் கூறிக்கொள்ள வேண்டும்? இவர்களாக "ஆசிய நாடுகளின் 'கார்டியன்'களாக நாங்கள் இருக்கிறோம்" என்று கூறுவது, ஏற்கனவே இவர்களது ஆதிக்கத்தின் கீழ் அடிமைப்பட்டுக் கிடந்த மக்களுக்குச் சந்தேகத்தையும் அச்சத்தையும்தானே ஊட்டும்?

தாங்கள் உலகின் வேறு பல பாகங்களிலும் நடத்திக்கொண்டிருக்கும் கெடுபிடிப் போரை இந்தத் திக்கிலும் தோற்றுவித்து, இங்குள்ள சில நாடுகளையும் அந்தக் கெடுபிடிப் போருக்கான தளங்களாக்க வேண்டுமென்ற தியநோக்குடன்தான் மேற்கு வல்லரசுகள் இந்தக் கூட்டுகளை நடத்திக்கொண்டிருக்கின்றன என்ற சந்தேகம் வலுப்பெறத்தான் செய்யும்.

மேலும், இந்தக் கூட்டுக்குள் அடைபட்டுக் கிடக்கும் நாடுகளிடம் எந்த விவகாரத்திலாவது ஒற்றுமை இருப்பதாகவும் தெரியக்காணோம். கூட்டினைத் தயாரித்த அமெரிக்காவும் பிரிட்டனும்கூட செஞ்சீனாவை அங்கீகரிக்கும் விஷயத்தில் ஒருமித்தக் கருத்துடையவையாக இல்லை. அமெரிக்காவிடமிருந்து இராணுவ உதவிபெறும் பாகிஸ்தான், பீகிங் சர்க்காரை அங்கீகரித்திருக்கிறது. இப்படி எந்த ஒரு விஷயத்திலும் ஒன்றுபட முடியாதவர்கள்—ஆனால் 'கூழுக்கும் ஆசை மீசைக்கும் ஆசை' என்ற போக்குடையவர்கள் ஒன்று சேர்ந்து, பரஸ்பரப் பாதுகாப்பிற்கு என்று இராணுவ ஒப்பந்தம் செய்துகொண்டிருப்பது, வேடிக்கையிலும் வேடிக்கைதான். வேடிக்கையானது என்றாலும் 'சீட்டோ' போன்ற ஒப்பந்தங்கள் பலவித அபாயங்களையும் உள்ளடக்கியவை என்பதை எண்ணும்போது வேதனையாகவும் இருக்கிறது.

மேலும், இதுபோன்ற ஒப்பந்தங்களின் கர்த்தாக்கள், ஒப்பந்தங்களுக்குக் கட்டுப்பட்ட நாடுகள், தங்கள் விருப்பத்திற்கு மாறாகச் செல்லும்போது அவற்றை எந்த கதிக்குக் கொண்டு செல்வர் என்பதற்கு, ஹங்கேரி வீதிகளில் நடமாடிய ரஷ்ய டாங்குகளும் அவை கக்கிய குண்டுகளும் அந்தக் குண்டுகள் வீழ்த்திய பிணங்களும் மறக்கமுடியாத சான்றுகளாகும்.

எனவே, ஏதோ ஒரு அற்பக் காரணத்திற்காக — சிறு 'இலாபத்திற்காக, 'சீட்டோ', 'வார்சா' 'பாக்தாத்' போன்ற ஒப்பந்தங்களில் இணைந்துள்ள சின்னஞ் சிறு நாடுகள், ஆபத்துக்களை வருந்தி அழைத்து விலை கொடுத்து வாங்கிக்கொண்டிருக்கின்றன என்றே எச்சரிக்க விரும்புகிறோம்.

இந்த ஒப்பந்தங்கள் எல்லாம் கெடுபிடிப் போரிலும் ஆதிக்கப் போரிலும் இலாபவேட்டையாட நினைக்கும் வல்லரசுகளின் வஞ்சக வலைகள் என்பதை, சம்பந்தப்பட்ட நாடுகள் உணர வேண்டிய காலம் தள்ளிப் போகக்கூடாது.

# மராத்திய மக்களின் மனக் கொதிப்பு

## என். வி. காட்கிலுக்கும் தோல்வியை தேடித் தந்துள்ளது

பூனா, மார்ச் 14—

டில்லி பாராளுமன்றத்திற்குப் பூனா தொகுதியில் காங்கிரஸ் அபேட்சகராகப் போட்டியிட்ட என். வி. காட்கில் தோற்கடிக்கப்பட்டிருக்கிறார். அவரை எதிர்த்துப் போட்டியிட்ட சம்யுக்த மராட்டிய சமிதியின் ஆதரவு பெற்ற பி. சோ. கட்சித் தலைவர் என். ஜி. கோரே என்பார் சுமார் 44,000 வாக்குகள் அதிகம் பெற்று வெற்றியடைந்திருக்கிறார்.

தோல்வி அறிந்த பிறகு என். வி. காட்கில் ஒரு கூட்டத்தில் பேசும்போது கடந்த காலத்தின் நெருக்கடியான நேரத்தில் மகாராஷ்டிரம் முழுமையிலும் காணப்பட்ட நிலைமைகளைத் தாம் அறிந்தே இருந்ததாகவும், எனினும் உணர்ச்சி வசத்திலிருந்து மக்கள் விடுபட்டு நியாயத்தை அறிவார்கள் என்று தாம் நம்பித் தோல்வியடைந்து விட்டதாகவும் குறிப்பிட்டதாகத் தெரிகிறது.

# அமைச்சர்களின் தோல்விப் படலம்!

பம்பாய் மாநிலத்திற்கான சட்டசபைத் தேர்தலில் காங்கிரஸ் அமைச்சர்களும், 'பெருந்தலை'களும், சம்யுக்த மகாராட்டிர அபேட்சகர்களின் எதிர்ப்புக்கு ஆளாகித் தோற்றுப்போய், நீண்டுகொண்டே போகும் அவர்களது தோல்விப் பட்டியல் இன்னும் நின்றபாடில்லை.

காங்கிரஸ் அமைச்சர்களைப் படுதோல்வியடையச் செய்து மகாராட்டிர அபேட்சகர்கள் வெற்றிக் கொடி நாட்டிவரும் செய்திகள் தினமும் வந்தவண்ணமுள்ளன.

பம்பாய் பல்தான்மான் இரட்டை உறுப்பினர் தொகுதிகளுக்கான இரண்டு இடங்களுக்கும் பம்பாய் மாநில அமைச்சர்கள் இரண்டு பேர் காங்கிரஸ் கட்சியின் அபேட்சகர்களாகப் போட்டியிட்டனர். ஆனால் அவர்களை எதிர்த்துப் போட்டியிட்ட சம்யுக்த மராட்டிய அபேட்சகர்கள் 12,000 வாக்குகள் வித்தியாசத்தில் இரு அமைச்சர்களையும் குப்புறத் தள்ளி மண்ணைக் கவ்வச் செய்திருக்கின்றனர்!

ஏற்கனவே, பம்பாய் மாநில அமைச்சர்கள் மூன்று பேர் தோல்விப் படுகுழிக்கு அனுப்பப்பட்டது தெரிந்ததே! இப்போது இந்த இருவருடன் இதுவரை மொத்தம் 5 அமைச்சர்களுக்கும், மற்றும் பல 'தலைவர்'களுக்கும் சம்யுக்த மராட்டிய வீரர்கள் தகுந்த தீர்ப்பு வழங்கியிருக்கின்றனர்!

பம்பாய் நகரத்தின் மதுங்கா இரட்டை உறுப்பினர் தொகுதிகளில், சம்யுக்த மராட்டிய சமிதியின் ஆதரவுபெற்ற ஒரு பி. சோ. கட்சி உறுப்பினரும், மற்றொரு தாழ்த்தப்பட்டோர் பெடரேஷன் உறுப்பினரும், தங்களை எதிர்த்துப் போட்டியிட்ட காங்கிரஸ் அபேட்சகர்களை முறியடித்து மகத்தான வெற்றி பெற்றிருக்கின்றனர்.

பம்பாய் நகரின் மற்றொரு இரட்டைத் தொகுதியான பைக்குல்லா தொகுதியில் சம்யுக்த மராட்டிய சமிதி ஆதரவுடன் போட்டியிட்ட கம்யூனிஸ்டு அபேட்சகரும் தாழ்த்தப்பட்டோர் பெடரேஷன் அபேட்சகரும் காங்கிரஸ் அபேட்சகர்களை விட பெரும்பான்மையான வாக்குகள் பெற்று வெற்றியடைந்திருக்கின்றனர்.

விதர்ப்பத்திலும் இரட்டை உறுப்பினர் தொகுதி ஒன்றில் மேற்படி சமிதியின் ஆதரவில் போட்டியிட்ட ஒரு கம்யூனிஸ்டு அபேட்சகரும் ஒரு தாழ்த்தப்பட்டோர் பெடரேஷன் அபேட்சகரும் காங்கிரஸ் அபேட்சகர்களை முறியடித்து வெற்றி பெற்றிருக்கின்றனர்.

**பஞ்சாபில்:**

ஜலந்தர் மாவட்டத்திலுள்ள நூர்மகால் தொகுதியில் போட்டியிட்ட மாநில அமைச்சர் ஒருவர், தம்மை எதிர்த்துப் போட்டியிட்ட கம்யூனிஸ்டு அபேட்சகரைத் தோற்கடித்து வெற்றி பெற்றதாகத் தெரிகிறது.

**பீகாரில்:**

பீகார் மாநிலத்திலுள்ள பகோடார் தொகுதியில் காங்கிரஸ் அபேட்சகராகப் போட்டியிட்ட பொதுவேலை இலாகா அமைச்சர் அப்துல் கயாம் அன்சாரியை, சுமார் 5,000 வாக்குகள் அதிகம் பெற்றுத் தோற்கடித்திருக்கிறார் ஜனதா கட்சியின் சார்பில் போட்டியிட்ட திருமதி விஜயா ராணி என்பார்!

## ஏகாதிபத்தியர் சரிவு?

கோலாலம்பூர், மார்ச் 14—

மலேயாவில் இதுவரையில் தான் கொண்டிருந்த ஆதிக்கப் பிடியை, பிரிட்டன் இப்போது சிறிது சிறிதாகத் தளர்த்தி வருவதாகத் தெரிகிறது!

மலேயாவில் இதுவரையில் வைத்திருந்த தனது படைகளின் எண்ணிக்கையில் பாதியைக் குறைத்துவிடுவதற்குப் பிரிட்டன் ஒப்புக்கொண்டது.

திரும்பப் பெறப்பட்ட படைகள் போக எஞ்சிய படைகளின் வேலை குறித்து அவரிடம் கேட்கப்பட்டபோது அவர். 'வருகிற ஆகஸ்டு மாதம் 31-ந் தேதி மலேயாவிற்குச் சுதந்திரம் கிடைத்தான பின்னர், நாடு முழுமையிலுமாகக் கம்யூனிஸ்டுக் கலகக்காரர்களை அடக்குவதில் அந்தப் படைகள் தீவிரமாகப் போராடிவரும்' என்று குறிப்பிட்டாராம்!

ஆனால், மேற் குறிப்பிட்டபடி, பிரிட்டன் துருப்புகள் எப்பொழுது குறைக்கப்படும் என்பது பற்றிய நிச்சயமான தகவலை அவர் தரவில்லையாம். அல்லது, 'பிரிட்டிஷ்' படைகள் என்று குறிப்பிடப்படுவது, முழுமையுமாகப் பிரிட்டனின் படைகள்தானா அல்லது காமன்வெல்த் நாடுகள் அனைத்தையும் சேர்ந்த துருப்புகளா என்பது குறித்தும் அவர் எதும் அறிவிக்கவில்லையாம்.

# 25 இலட்சம் தொழிலாளர் வேலைநிறுத்தம்?

## பிரிட்டனில் தொழில் நெருக்கடி தோன்றும்!

25 இலட்சம் எஞ்சினியரிங் தொழிலாளர்கள், தங்களுக்கு 10 சதவிகித சம்பள உயர்வு வேண்டுமெனக் கேட்டிருந்த கோரிக்கையை ஏற்க இலண்டன் முதலாளிகள் மறுத்துவிட்டனராம்!

இதன்விளைவாக, தொழிலாளர்கள் வேலைநிறுத்தத்தில் ஈடுபடலாம் என்றும், அது பெரும் தொழில் நெருக்கடியை உண்டுபண்ணக் கூடும் என்றும் அஞ்சப்படுகிறதாம்.

## ரஷ்யாவின் எண்ணம்

### பாகிஸ்தான் அமைச்சர்கள் கண்டனம்

கராச்சி, மார்ச் 15—

"காஷ்மீர் பிரச்சினையில் தகராறுக்குரிய சில அம்சங்களை சர்வதேச நீதிமன்றத்திற்கு அனுப்பலாம் என்று சிலர் கூறும் யோசனைகளை பாகிஸ்தான் ஏற்றுக்கொள்ளாது; அந்த யோசனைகள் மோசமானவை; இதனால் தகராறுகள் நீண்டுகொண்டே செல்லும்; இந்த அர்த்தத்தில்தான் யோசனைகள் கூறப்படுகின்றன" என்று, பாகிஸ்தான் வெளிநாட்டமைச்சர் பிரோஸ்கான் நூன் கூறியுள்ளார்.

"ஐ. நா. முடிவை மீறும்படி இந்தியாவைத் தூண்டுவது ரஷ்யாதான்; இரு நாடுகளுக்குமிடையே போர் மூண்டுவிட்டால் இறுதியில் இரு நாடுகளிலும் கம்யூனிசத்தை நிலைநாட்டிவிடலாமென ரஷ்யா கருதுகிறது. முடிவில் தன் வசப்படுத்திக்கொள்ளலாம் என்ற எண்ணத்துடன்தான் கம்யூனிஸ்டு அல்லாத நாடுகளுக்கு ரஷ்யா போர்க் கருவிகளை விற்பனை செய்கிறது.

"போர் மூளுவது இரு நாடுகளுக்குமே தீங்கானது; எனவே, இரு நாட்டவரும் நண்பர்களாய் வாழவேண்டும்," என்றும் அவர் குறிப்பிட்டிருக்கிறார்.

### நெருக்கடிக்குக் காரணம்?

கான்பெர்ரா, மார்ச் 14—

இந்தியாவின் பிடிவாதப் போக்கினால், ஐ. நா.-வின் மத்தியஸ்தர் ஜாரிங்கின் வருகை காஷ்மீர் பிரச்சினையில் பலனின்றிப் போகக்கூடுமென்றும், ஜாரிங் வருகை தோல்வியடைந்தால் காஷ்மீர் பிரச்சினை மறுமுறையும் ஐ. நா.-வுக்குக் கொண்டுபோகப்படுமென்றும் பாகிஸ்தான் நிதியமைச்சர் அம்ஜத் அலி கூறியிருப்பதாகத் தெரிகிறது.

உலகத்தின் தார்மீக சக்தி இந்தியாவை ஐ. நா.-வின் தீர்ப்புக்கு தலைவணங்கச் செய்யுமென தான் நம்புவதாகவும், ரஷ்யாவின் போக்கால், பாகிஸ்தான்—இந்தியா நாடுகளுக்கிடையே நெருக்கடி அதிகரிப்பதாகவும் அவர் கருத்தறிவித்துள்ளார்.

## காய்கறிகள், பழங்களுக்குக் கால்பங்கு கட்டணம்?

இரயில் மூலம் அனுப்பப்படும் காய்கறிகள், பழங்கள் முதலியவைகளுக்கு வழக்கமான பார்சல் கட்டணத்தில் கால் பங்கே வசூலிக்கவேண்டும் என்று இந்திய விவசாய ஆராய்ச்சிக்குழு சிபாரிசு செய்திருக்கிறது.

இவைகளை ஏற்றிச் செல்ல வேகமாகச் செல்லக்கூடிய குளிர் சாதனப் பெட்டிகளை இணைக்க வேண்டும் என்றும் குழு கூறியுள்ளது.

நாட்டில் வசதியான இடங்களில் குளிர்சாதன கிடங்குகள் ஏற்படுத்தவேண்டும் என்றும், தோட்ட முதலாளிகளுக்குக் கடனுதவி, லைசென்சு முதலியன அளித்து ஊக்குவிக்கவேண்டும் என்றும் குழு சிபாரிசு செய்திருக்கிறது.





# தேர்தல் நிதி

| வரவு | ரூ. | அ. | பை |
|---|---|---|---|
| 6—3—57 இதழ்ப்படி ... | 93,607 | 7 | 2 |
| கோலாலம்பூர் சின்னையா ... | 15 | 0 | 0 |
| சிங்கப்பூர் எஸ். செல்லையா ... | 15 | 0 | 0 |
| திருச்சி-அலிமகால் தெரு, ராபி கம்பெனி ... | 15 | 0 | 0 |
| சேந்தமங்கலம் தி. மு. க. கூட்டத்தில் எம். ஜி. ஆர். மூலம்: மாலையாகக் காலணுக்கள் ... | 1 | 9 | 3 |
| திருச்சி மணிக்கூண்டு-கே. இராசகோபால் ... | 2 | 8 | 0 |
| சென்னை-கொருக்குப்பேட்டை டி. கே. சிவானந்தம் ... | 33 | 0 | 0 |
| துறையூர் தி. மு. கழகம் ... | 30 | 0 | 0 |
| சென்னை-தம்புச்செட்டித் தெரு சி. கா. கிருட்டிணன் ... | 1 | 9 | 0 |
| மதுரை-பழைய ஆயக்குடி அன்புப்பழம் ... | 1 | 0 | 0 |
| ஒட்டன்சத்திரம் தி. மு. கழகம்— என். ரங்கசாமி மூலம்: ... | 26 | 6 | 0 |
| இலங்கை-புத்தளம் வி. எம். வீரப்பா ... | 5 | 0 | 0 |
| லாரன்ஸ் ... | 20 | 0 | 0 |
| லாரன்ஸ் ... | 17 | 0 | 0 |
| நெய்வேலி எ. எம். ஜெகநாதன் ... | 10 | 0 | 0 |
| வடசென்னை—பெரியகடைவீதி பலதரப்பட்ட வியாபாரிகள் ... | 48 | 2 | 6 |
| சென்னை-எழும்பூர் இரயிலடி ஐயனார் விலாஸ் ஓட்டல் தொழிலாளர்கள் ... | 5 | 1 | 0 |
| திருச்சி-இ. கே. கன்னியப்பன் ... | 18 | 8 | 0 |
| பீகார்-தன்பாட் கே. நாராயணசாமி ... | 14 | 1 | 0 |
| திருச்சி-மேலூர் சலவைத் தொழிலாளர் என். முனுசாமி ... | 2 | 0 | 0 |
| காணுடுகாத்தான் தி. மு. கழக ஆதரவாளர் எம். கே. சாமி மூலம்: ... | 22 | 0 | 0 |
| ஈராகுட் அணை தமிழ்ப் புத்தக வியாபாரம் கே. வி. குமாரசாமி ... | 2 | 0 | 0 |
| ,, துணி வியாபாரம் ஏ. பி. நல்லமுத்து ... | 2 | 0 | 0 |
| ,, துணி வியாபாரம் பி. டி. கோபால் ... | 2 | 0 | 0 |
| ,, கல்துச்சுவேலி எம். சோமு ஆச்சாரி ... | 2 | 0 | 0 |

ஆக மொத்தம் ரூ. 93,917-15-4

## நிசாம்மீது புகார்

### புதல்வியின் திருமணத்தை நிறுத்தக் கோரி நோட்டீஸ்

ஐதராபாத், மார்ச் 14—

ஏற்கனவே தமது மகளான நசீம் உன்னிசா பேகத்தை நிசாம், ஒருவருக்குத் திருமணம் செய்து வைத்தார்.

ஆனால், திருமணமாகிவிட்ட தமது மகளை, அவருடைய கணவன் வீட்டுக்கு அனுப்பிவைக்காமல் 27 ஆண்டுகளாகத் தம்முடனேயே வைத்துக்கொண்டார்.

திருமணமாகி 27 ஆண்டுகள் கழித்தும், அவருடைய கணவர் ஏதும் நடவடிக்கைகள் எடுக்காததால், நிசாம் மன்னர், தமது மகளுக்கு மறு திருமணம் செய்து வைக்க நிச்சயித்து ஏற்பாடுகளும் செய்துவிட்டார்.

தமது சொந்த மனைவியின் மறு திருமணச் செய்தி கேட்டதும் நிசாமின் மருமகனார், தமது மனைவியை தாம் இருக்கும்போதே மற்றொருவருக்குத் திருமணம் செய்துவைக்கப் போவதாகக் கூறி, அத்திருமணம் உடனே நிறுத்தப்பட வேண்டுமென்று வக்கீல் ஒருவரின் மூலம் தாக்கீது அனுப்பிவிட்டாராம்!

27 வருட காலமாகக் கணவன் வீட்டுக்கு அனுப்பிவைக்காமல் நிசாம் மன்னர் தமது வீட்டிலேயே வைத்திருந்தது சட்டப்படி குற்றம் என்றும், உடனே தமது வீட்டுக்கு தமது மனைவியை அனுப்பிவைக்காவிட்டால், சட்டப்படி மன்னர்மீது தாம் நடவடிக்கை எடுக்கப் போவதாகவும் அந்த வக்கில் தாக்கீதில் அவர் குறிப்பிட்டிருக்கிறாராம்.

## சரித்திர காலத்தின் நட்பும் பிணைப்பும்

### மேலும் பலப்படுத்தப்படும் என்கிறார் நேபாள மன்னர்

கொழும்பு, மார்ச் 14—

இலங்கையர் புனிதமாகக் கொண்டாடும் நிகழும் சம்புத்த ஜெயந்தி வருடத்தில் ஒவ்வொரு மாதத்திலும் பௌர்ணமி நாட்களை விசேடமான முறையில் கொண்டாடுகின்றனராம்.

இந்த விழாவில் பங்கேற்றுக் கொள்ளும் நோக்கத்துடன் நேபாள மன்னரும் அவரது துணைவியாரும் இலங்கை வந்திருக்கின்றனர்.

இலங்கை மக்களுக்கு நேபாள மன்னர் விடுத்த ஆசிச் செய்தி ஒன்றில், இலங்கையும் நேபாளமும் வெகு தூரத்திற்கிடையே இருந்தபோதிலும் சரித்திரக் காலந்தொட்டு இரு நாடுகளும் நட்பு நாடுகளாகவே இருந்து வருகின்றன என்றும், அந்த நட்பும் பிணைப்பும் தம்முடைய வருகையால் மேலும் அதிகமாகிப் பலப்படுத்தப்படும் எனத் தாம் நம்புவதாகவும் குறிப்பிட்டிருக்கிறாராம்.

# மற்றுமோர் கன மின்சார இயந்திரத் தொழிற்சாலை

## வட நாட்டில்தான் அமையுமா?

ஏற்கனவே போபாலில் நிறுவுவது என்று முடிவாகியுள்ளதன்னியில் மற்றுமோர் கனரக மின்சார இயந்திரத் தொழிற்சாலை ஒன்று நிறுவுவதென்றும் டில்லி சர்க்கார் முடிவு செய்திருக்கிறார்களாம்.

போபாலில், துவக்கத்தில் ரூ. 8 கோடி பெறுமான இயந்திரங்களையே உற்பத்தி செய்ய முடியும் என்று கணக்கிட்டிருந்ததுபோக, இப்போது இந்த உற்பத்தியை அதிகரிப்பது என்றும், 16 முதல் 18 கோடி ரூபாய்வரை பெறுமானமுள்ள இயந்திரங்கள் உற்பத்திக்குப் போபாலில் ஏற்பாடுகள் செய்யப்படுவதாகவும் அதோடு, மேலும் ஒரு புதிய தொழிற்சாலையை நிறுவ எண்ணியுள்ளதாகவும் மத்திய மந்திரி மனுபாய் ஷா கல்கத்தாவில் கூறியிருக்கிறார்.

ஆனால் இந்தத் தொழிற்சாலை எங்கு நிறுவப்படும் என்று அவர் திட்டமாகத் தெரிவிக்காதது, வழக்கம்போல அதுவும் வடநாட்டிலேயேதான் அமையுமோ என்ற சந்தேகம் நமக்கு இயற்கையாக எழுகிறது!

# இரண்டரை கோடி ரூபாய் செலவில் மூக்குக் கண்ணாடித் தொழிற்சாலை

## வடநாட்டிலேயே அமைக்க டில்லி முடிவு

புதுடில்லி, மார்ச் 14—

ஆண்டொன்றுக்கு 300 டன் மூக்குக்கண்ணாடி உற்பத்தி செய்யக்கூடிய தொழிற்சாலையும், வேறெல்லாவற்றையும் போலவே வடநாட்டிலேயே நிறுவப்படுகிறது!

பீகார் மாகாணத்தில் அசன்சால் எனும் பகுதியில் இந்தத் தொழிற்சாலை அமையுமாம்!

இந்தத் தொழிற்சாலையை நிறுவ சுமார் இரண்டரைக் கோடி ரூபாய் செலவாகுமாம்!

இப்படி ஒரு தொழிற்சாலை அமைப்பது பற்றி ஆராய்ந்தறிந்த ரஷ்ய நிபுணர் குழு ஒன்றின் சிபாரிசின் பேரிலேயே தொழிற்சாலை துவங்கப்படுகிறதாம்!

இந்தத் தொழிற்சாலை அமைப்பதில் ரஷ்யா என்னென்ன வகைகளில் உதவக்கூடும் என்பதையும், தங்கள் அறிக்கையில் ரஷ்ய நிபுணர்கள் தெரிவித்திருக்கின்றனராம்.

இந்தியாவில் இந்தத் தொழிற்சாலை நிறுவுவதற்குத் தேவையான மூலப் பொருள்கள் அனைத்தும் இங்கேயே கிடைப்பதாகவும் குழுவினர் தெரிவித்துள்ளனர்.

# மற்றுமோர் உரத் தொழிற்சாலை

## வடநாட்டிலேயே அமைக்க முடிவு

மற்றுமோர் உரத் தொழிற்சாலை நிறுவப்போகிறார்களாம் டில்லியினர்!

அதுவும் வடநாட்டில்தானும்!

பம்பாயில் டிராம்பே எனும் இடத்திலேயே அத்தொழிற்சாலையை நிறுவுவது என்று டில்லி முடிவு எடுத்துவிட்டதாம்!

'டிராம்பே' எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலையில் கழிவாகக் கிடைக்கும் வாயுக்களை உபயோகித்து எரு தயாரிக்க உத்தேசமாம்!

## 75,000 டாலர் பரிசு!

### ஆக்க வேலைக்கான அணுசக்தி ஆராய்ச்சிக்காகவாம்!

### 75 விஞ்ஞானிகள் சிபாரிசு செய்யப்பட்டனர்

அணுசக்தியை ஆக்க வேலைக்குப் பயன்படுத்துவது பற்றிய ஆராய்ச்சிக்கான முதல் பரிசுக்கு டென்மார்க் அணுசக்தி விஞ்ஞானி ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறாராம்.

75,000 டாலருக்கான இப்பரிசுக்கு 23 நாடுகளைச் சேர்ந்த 75 விஞ்ஞானிகளின் பெயர்கள் சிபாரிசு செய்யப்பட்டிருந்தனவாம்; முன்னரே நோபல் பரிசு பெற்றவரும் 71 வயதுள்ளவருமான புரபசர் நீல்ஸ் போகர் என்ற டென்மார்க் விஞ்ஞானி இப்பரிசுக்கு உரியவரானார்.

"பௌதிகத் துறையில் வாழ்நாள் முழுமையிலும் சேவை விஞ்ஞானத்திற்கும் மனித குலத்திற்கும் அவர் செய்த பல மாபெரும் நன்மைகளுக்காகவே அவருக்கு ஒரு தங்கப் பதக்கமும், 75,000 டாலரும் வழங்கப்படுகிறது" என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது.

# கைத்திறமை கொண்டதாக கைத்தறி துணிகள் இருக்க வேண்டுமாம்!

## அமெரிக்காவில் அதிக அளவில் விற்பனையாக வர்த்தகக் குழுவினர் கூறும் யோசனைகள்

இந்தியக் கைத்தறித் துணிகள் அமெரிக்காவில் அதிகமான அளவில் விற்பனையாகி அவைகளுக்கு கிராக்கி ஏற்படவேண்டுமானால், அவை இன்னின்ன மாதிரி இருக்கவேண்டும் என்பது குறித்துத் தங்கள் ஆலோசனையை, சென்னை வந்துள்ள அமெரிக்க வர்த்தகக் குழு ஒன்று கூறியிருக்கிறதாம்!

தயாரிக்கப்படும் கைத்தறித் துணிகள் அனைத்தும், இயந்திரங்களின் மூலம் உற்பத்தியாகும் துணிகளைப்போல் பார்வைக்கு இராமல் கைத்திறமைவாய்ந்தவையாக இருக்கவேண்டுமாம்.

அடுத்து அவைகள் தண்ணீரில் நனைத்தால் சுருங்கக்கூடாது; கெட்டியான சாயம் ஏற்றப்பட்டவைகளாக இருக்கவேண்டும்; இவைமட்டுமின்றி, துணிகளில் போடப்படும் பூவேலைப்பாடுகளில் அழகான கலரில், கண்ணுக்குக் கவர்ச்சிகரமானவையாவும் இருக்கவேண்டும்.

இவைதான் அமெரிக்காவில் இந்தியக் கைத்தறித் துணிகளுக்கு நல்ல விற்பனை ஏற்படுவதற்கு அமெரிக்கக் குழுவினர் விதிக்கும் 'நிபந்தனைகள்'!

இந்தியாவிற்கும் அமெரிக்காவிற்குமிடையே நிலவிவரும் நட்புறவை மட்டுமல்லாது வர்த்தகத் துறையையும் அபிவிருத்தி செய்துகொள்வதே தங்களது இந்திய வருகையின் நோக்கம் என்றும், இந்த முயற்சி சர்க்காருக்குச் சர்க்கார் என்ற முறையில் அல்லாமல், இரு நாடுகளுக்கு மிடையே 'மனிதனுக்கு மனிதன்' என்ற அளவில் நல்ல உறவை நிலைநாட்டும் எண்ணத்துடன் மேற்கொள்ளப்பட்டதாகவும் அவர்கள் குறிப்பிட்டதாகத் தெரிகிறது.

கைத்தறி ஆடைகள், பட்டுத் துணிகள், பித்தளை, செம்புச் சாமான்கள் போன்ற சாமான்களை நல்ல முறையில் தயாரித்து அதிகமான அளவுக்கு இந்தியா அமெரிக்காவிற்கு ஏற்றுமதி செய்யலாம் என்றும் அக்குழுவினர் கருத்தறிவித்திருக்கின்றனராம்.

## பம்பாயில் உருவாகும் புதிய தொழில் நுணுக்கக் கல்லூரி

### ஆசிரியர்களாகப் பணியாற்ற ரஷ்ய விஞ்ஞானிகள் வருவராம்

பாரிஸ், மார்ச் 15—

பம்பாய்க்கு அருகில் இந்திய சர்க்காரால் நிறுவப்படும் புதிய தொழில் நுணுக்கக் கல்லூரியில் ஆசிரியர்களாகப் பணியாற்ற 6 ரஷ்ய விஞ்ஞானிகள் இந்தியாவுக்குச் செல்வரென இங்கு அறிவிக்கப்பட்டிருக்கிறது.

இவர்கள் மட்டுமின்றி மேலும் இதர நாடுகளைச் சேர்ந்த 9 பேராசிரியர்கள் அனுப்பப்படுவாராம்.

1956 டிசம்பர் முதல், நான்கு ரஷ்ய விஞ்ஞானிகள் இந்தியாவில் பணியாற்றி வருகின்றனர். இவர்களும், புதியதாகச் செல்லும் 6 விஞ்ஞானிகளும் பம்பாய்க்கு அருகில் பவாய் என்ற இடத்தில் மேற்கத்திய உயர்தர தொழில் நுணுக்கக் கல்லூரி நிறுவப்படும்வரை காக்பூர், பெங்களூர், பம்பாய் ஆகிய இடங்களிலுள்ள தொழில் நுணுக்கக் கல்வி நிலயங்களில் வேலைசெய்து வருவராம்.

## மாவட்டக் கழகப் பணியாளர்கள்

### 'கிராக்கிப்படி' உயர்வு பெறுவர்

திருவனந்தபுரம், மார்ச் 14—

கேரள மாநிலத்தைச் சேர்ந்த மலபார் மாவட்டக் கழகப் பணியாளர்கள் அனைவருக்கும், சர்க்கார் ஊழியர்களுக்குத் தரப்படும் விகிதத்தில் கிராக்கிப்படி கொடுப்பதென முடிவு செய்துள்ளதாகத் தெரிகிறது.

இந்தத் திட்டத்தின் முதல் நடவடிக்கையாக, ஏற்கனவே இம்மாதம் 1-ந்தேதி முதல் அம்மாவட்டக் கழக நிர்வாகத்தின்கீழ் இருக்கும் ஆரம்ப இடைநிலைப் பள்ளிகளில் பணியாற்றும் பயிற்சி பெற்ற ஆசிரியர்களுக்குக் தரப்பட்டுவிட்டதாம்.

புதிய விகிதப்படி தங்களுக்குக் கிராக்கிப்படி கிடைக்க இருப்பதால், அந்த ஊழியர்களெல்லாம் இதுவரை வீட்டு வாடகை அலவன்ஸ் தருமாறு கேட்டுக் கொண்டுவந்த கோரிக்கையை நிறுத்திக்கொள்வர் என்று தெரிகிறது.

## ஏற்றுக்கொள்ளாதாம்!

ஒட்டாவா, மார்ச் 14—

எகிப்திலுள்ள ஐ. நா. அவசர காலப் படையில் மேற்கொண்டும் கனடா துருப்புகள் சேர்க்கப்படுவதை எகிப்து ஏற்றுக்கொள்வதற்கில்லை என்று எகிப்திய அதிகாரிகள் அறிவித்துள்ளனராம்.

# பண்டைய முறைகள் ஒழிக்கப்படும்?

## நவீன முறைகளைப் புகுத்த 'மாதிரி'த் திட்டம்

புதுடில்லி, மார்ச் 14—

சிறு சிறு தொழிலதிபர்களுக்கு உதவியாக, பித்தளைச் சாமான்கள் தயாரிப்பதற்கான ஒரு 'மாதிரி'த் திட்டத்தினை மத்திய வர்த்தகத் துறை இலாகாவின் சிறு ரகத் தொழில்கள் நிறுவனம் தயாரித்துள்ளதாகத் தெரிகிறது.

இதுபோன்ற சிறு சிறு பொருட்களைத் தயாரிப்பதில் பண்டைய முறைகளை ஒழித்துவிட்டு நவீன துறைகளைப் பின்பற்றி உற்பத்தி செய்வதில் சிறு ரகத் தொழிலதிபர்களுக்கு உற்சாகமூட்டவும், வருங்காலத்தில் அதிகமான அளவிற்கு இந்தியாவிற்குத் தேவைப்பட இருக்கும் பித்தளைச் சாமான்களை நவீன முறையில் தயாரிக்கவுமே இந்தத் திட்டம் துவக்கப்பட்டிருக்கிறதாம்!

## முழு அளவில் மதுவிலக்கு

1959-ம் ஆண்டு ஏப்ரல் திங்கள் முதல் பம்பாய் மாநிலம் முழுமையிலும்—மாநிலச் சீரமைப்புக்குப் பின் பம்பாயுடன் சேர்க்கப்பட்டுள்ள புதிய பகுதிகளிலும் பூரண மதுவிலக்கு அமுலுக்குக் கொண்டுவரப்படுமாம்.

# சுதந்திரத் தாகம் கொண்டோர் நடத்திய தேர்தல் போராட்டம்

## மக்கள் பெற்றுவரும் ஜனநாயக உணர்வு பற்றிய விவரங்கள்

சென்னை, மார்ச் 16—

தேர்தல் முடிவுகள் குறித்து மேலும் சில இடங்களிலிருந்து தகவல்கள் கிடைத்துள்ளன.

சென்னை பெரம்பூர் பொதுத் தொகுதியில் போட்டியிட்ட கம்யூனிஸ்டு அபேட்சகர் சுமார் 4000 வாக்குகள் மட்டுமே பெற்றுப் படுதோல்வி அடைந்து டிபாசிட்டையும் இழந்துவிட்டிருக்கிறார். காங்கிரஸ் கட்சி சார்பில் போட்டியிட்ட அபேட்சகர் சுமார் 31,000 வாக்குகள் மட்டும் பெற்று தோல்வியடைந்திருக்கிறார். காங்கிரஸ் அபேட்சகரைவிட சுமார் 3,000 வாக்குகள் அதிகம் பெற்று சோஷலிஸ்டு அபேட்சகர் தோழர் எஸ். பக்கிரிசாமி அவர்கள் வெற்றி பெற்றிருக்கிறார்.

கோவை 2 இரட்டைத் தொகுதித் தேர்தலில் போட்டியிட்ட எல்லா அபேட்சகர்களையும்விட தனித் தொகுதியில் போட்டியிட்ட ஒரு கம்யூனிஸ்டு அபேட்சகரும் காங்கிரஸ் அபேட்சகரும் அதிக அளவு வாக்குகள் பெற்றுள்ளமையால், தேர்தல் சட்டப்படி, பொதுத் தொகுதி, தனித் தொகுதி ஆகிய இரண்டு தொகுதிக்கும் வெற்றி பெற்ற தாழ்த்தப்பட்ட அபேட்சகர்களே தேர்ந்தெடுக்கப் பட்டவர்களாவர் என்று தேர்தல் அதிகாரி அறிவித்துள்ளார். இவ்விருவரில், மருதாசலம் என்ற கம்யூனிஸ்டு அபேட்சகர் 38,929 வாக்குகளும் பழனிசாமி என்ற காங்கிரஸ் அபேட்சகர் 37,662 வாக்குகளும் பெற்றுள்ளனர்.

மதுரை மேலூர் இரட்டைத் தொகுதியிலும் கழக அபேட்சகர்களைவிட அதிக வாக்குகள் பெற்றுக் காங்கிரஸ் அபேட்சகர்கள் வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது.

கரூர் தொகுதியில், கழக அபேட்சகர் தோழர் குழந்தைவேலுவைவிட அதிக வாக்குகள் பெற்றுக் காங்கிரஸ் அபேட்சகர் வெற்றிபெற்றிருக்கிறார்.

சிதம்பரம் பொதுத் தொகுதியில் கழக அபேட்சகராகப் போட்டியிட்ட தோழர் பொன். சொக்கலிங்கத்தைவிட சுமார் 7,000 வாக்குகள் அதிகம் பெற்றுக் காங்கிரஸ் அபேட்சகர் வெற்றி பெற்றிருக்கிறார். தோழர் பொன். சொக்கலிங்கத்திற்கு 30,345 வாக்குகளும், காங்கிரஸ் அபேட்சகருக்கு 37,225 வாக்குகளும் கிடைத்திருக்கின்றன.

கழகம் போட்டியிடாத சிதம்பரம் தனித் தொகுதியிலும் காங்கிரஸ் அபேட்சகர் வெற்றிபெற்றிருப்பதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

திண்டிவனம் இரட்டைத் தொகுதியில் காங்கிரஸ் அபேட்சகர்களை, ஒரு சுயேச்சை அபேட்சகரும் காங்கிரஸ் சீர்திருத்தக் கமிட்டி அபேட்சகரும் முறியடித்து வெற்றியடைந்திருக்கின்றனர். பொதுத் தொகுதியில், காங்கிரஸ் அபேட்சகரை விட சுமார் 9,000 வாக்குகள் அதிகம் பெற்று சுயேச்சை அபேட்சகரும், தனித் தொகுதியில், காங்கிரஸ் அபேட்சகரைவிட சுமார் 12,000 வாக்குகள் அதிகம் பெற்று காங்கிரஸ் சீர்திருத்தக் கமிட்டி அபேட்சகர் தோழர் எம். ஜகன்நாதனும் வெற்றி பெற்றிருக்கின்றனர்.

### பாராளுமன்றம் :

பாராளுமன்றத் தொகுதிகளுக்கான தேர்தல் முடிவுகள் குறித்து மேலும் சில தகவல்கள் கிடைத்துள்ளன.

திருவண்ணாமலை பாராளுமன்றத் தொகுதியில் காங்கிரசுக்கும் காங்கிரஸ் சீர்திருத்தக் கமிட்டிக்கும் இடையே நடைபெற்ற நேரடிப் போட்டியில் காங்கிரஸ் அபேட்சகரே வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது.

சிதம்பரம் இரட்டைத் தொகுதிகளிலும் நமது கழக அபேட்சகர்கள் போட்டியிட்டனர். பொதுத் தொகுதியில் கழக அபேட்சகரைவிட அதிக வாக்குகள் பெற்றுக் காங்கிரஸ் அபேட்சகர் வெற்றி பெற்றிருக்கிறார். காங்கிரஸ் அபேட்சகருக்கு 1,76,501 வாக்குகளும் காங்கிரஸ் சீர்திருத்தக் கமிட்டி அபேட்சகருக்கு 1,09,521 வாக்குகளும், கழக அபேட்சகருக்கு 85,943 வாக்குகளும் கிடைத்துள்ளன. தனித் தொகுதியில் போட்டியிட்ட நமது கழக அபேட்சகரைவிட 57,098 வாக்குகள் பெற்று வெற்றியடைந்திருக்கிறார். கழக அபேட்சகருக்கு 1,18,491 வாக்குகளும் காங்கிரஸ் அபேட்சகருக்கு 1,75,589 வாக்குகளும் கிடைத்துள்ளன.

நாகர்கோயில் தொகுதியிலும் காங்கிரஸ் அபேட்சகரே வெற்றி பெற்றதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது.

## சூயஸ் கால்வாயில் !

கெய்ரோ, மார்ச் 15—

கிரேக்கக் கப்பலான 'அந்தோனியோஸ்'80பவுன் கட்டணம் செலுத்தி சூயஸ் கால்வாய் வழியாக சென்றுள்ளது.

சமீபத்தில் நடைபெற்ற யுத்தத் திற்குப்பின் திறந்த, சூயஸ் கால்வாயில் சென்ற இரண்டாவது கப்பலாகும்.

## திரு. குமாரசாமி இராஜா மறைவு

சென்னை, மார்ச் 16—

திரு. குமாரசாமி இராஜா அவர்கள் இயற்கை எய்தினார் என்ற செய்தியை அறிவிக்க மிக வருந்துகிறோம்.

ஒரிசா மாநிலத்தில் கவர்னராகவும், சென்னை மாநிலத்தில் முதன் மந்திரியாகவும் இருந்த திரு. இராஜா அவர்கள் சேற்று விஜயவாடா அருகில் உள்ள தமது முன்னோர் கிராமத்தைச் சென்று பார்த்துவிட்டு நகருக்குத் திரும்பியதும், நெஞ்சுவலியால் தாக்கப்பட்டு சென்னை அரசாங்க மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டார்.

நள்ளிரவில், அவர் மருத்துவமனையிலேயே இயற்கை எய்தினார் என்ற சோகச் செய்தி தான் மிச்சம்.

ஓரிசா கவர்னர் பதவியிலிருந்து விலகுமுன்னர், சென்ற ஆண்டில் கோவை வந்திருந்தபோது அவர், வடநாட்டு ஏகாதிபத்தியம் தென்னாட்டு மாநிலங்களின் மீது கொண்டுள்ள ஆதிக்கம் குறித்தும், 'தென்னாடு வடநாட்டுக்கு அடிமையாகப் போய்விடும் காலம் தூரத்தில் இல்லை' என்றும் குறிப்பிட்டது, இன்றும் நம் காதுகளில் ஒலித்துக்கொண்டிருக்கிறது!

பெருந்தன்மைக்கும் நேர்மைக்கும் பெயர் பெற்ற குமாரசாமி இராஜா அவர்களின் மறைவு, நாட்டிற்கு ஏற்பட்ட பெரும் நஷ்டமாகும்.

அவரது பிரிவால் வாடும் அவரது துணைவியாருக்கும் குடும்பத்தாருக்கும் நாம் நமது ஆழ்ந்த அனுதாபங்களை உரித்தாக்குகிறோம். (ஆ - ர்.)

# 'நாடு அண்ணாவுக்குக் கடமைப்பட்டிருக்கிறது'

## 'அவரது வெற்றி சாமானியமானதல்ல'

## 'சட்டசபை இனி உயிர்பெறும்'

## 'தி. மு. கழகத்தின் கண்ணியம் பாராட்டுதலுக்குரியது'

### அண்ணாவை வரவேற்று 'ஆனந்த விகடன்'

"சென்ற ஏழாம் தேதி காலை முதலே தி. மு. கழக தொண்டர்களில் நூற்றுக் கணக்கானவர்கள் சைக்கிள்களில் ஏறிக்கொண்டு 'அண்ணா வெற்றி, அண்ணா வெற்றி' என்று குதூகலமாகத் தெருவெங்கும் கோஷித்துக்கொண்டே சென்றார்கள்; இளைஞர்களின் உற்சாகம் கரைபுரண்டோடியது! ஊரெங்கும் இதுவே பேச்சாக இருந்தது!

"ஆம்! காஞ்சியில் நடந்த தேர்தல் போட்டி தமிழ் நாட்டையே கவர்ந்த ஒரு நிகழ்ச்சி.

"அங்கு காங்கிரஸ் சார்பாக தேர்தலுக்கு நின்ற டாக்டர் சீனிவாசன் அவர்கள் பழம் பெரும் தேசபக்தர்; தியாகத்தால் உயர்ந்தவர்; அண்ணாதுரையாலும் நல்லவர் என்று மதிக்கப்படுபவர். அவரை எதிர்த்து நின்று 11,143 ஓட்டுக்களை அதிகம் பெறுவது சாதாரண விஷயமல்ல!

"அங்கு காங்கிரசின் தேர்தல் பிரச்சாரமும் குறைவில்லை. அதோடு பெரியார் ஈ. வெ. இராமசாமி அவர்கள், வீட்டுக்கு வீடு சென்று, 'கண்ணீர்த் துளிகளுக்கு ஓட்டுப் போடாதீர்கள்' என்று கூறினார். அண்ணாதுரையின் தோல்வியைக் கண்ணால் காண ஆசைப்பட்டார். இவ்வளவையும் மீறி இவ்வாறு பகத்தான வெற்றி கிடைத்துள்ளதைப் பார்க்கும்போது அண்ணாதுரையின்மேல் மக்களுக்கு உள்ள அபிமானம் நன்கு புலனாகிறது.

"இந்தத் தேர்தலில் ஈடுபட்டவுடனேயே தி. மு. கழகம் ஒரு தேர்தல் பிரகடனம் வெளியிட்டது. அதில் தேசத்தைப் பிரித்தல், வகுப்புத் துவேஷம் ஆகிய இரண்டும் கணிசமான அளவுக்குக் குறைந்திருந்தன. அதோடு அவர்கள் நடத்திய தேர்தல் கூட்டங்களில் எல்லாம் கண்ணியமான முறை கடைப்பிடிக்கப்பட்டு வந்தது. பேசிய தலைவர்கள் யாரும் வசை மொழிகளில் இறங்கவில்லை. தங்களை இடைவிடாமல் தாக்கும் பெரியாரைக்கூட அவர்கள் மரியாதை குறையாமல் தான் மறுத்துப் பேசிவந்தார்கள். இதைப்பார்த்து மக்கள் வியந்தார்கள்.

"இவைகள் எல்லாவற்றையும் நாட்டில் அண்ணாதுரைக்கு நாடு இன்றைய நிலையில் கடமைப்பட்டிருக்கிறது. தமிழ்நாட்டு இளைஞர்களிடையே அவர் ஊட்டியிருக்கும் அரசியல் அறிவையே குறிப்பிடுகிறோம். இன்று அந்த இளைஞர்களின் அரசியல் ஆர்வம் மாறுபட்ட வழிகளில் சென்றாலும் நாளை அதுவே சிந்தித்து நாட்டுக்கு நலம் செய்வதாகவும் மாற இடம் உண்டு.

"சட்டசபையிலும் இனி ஒரு புதுவிழிப்பு ஏற்படும். கேள்விகளும், மந்திரிகளின் பதில்களும் காரசாரமாக இருக்கும். அண்ணாதுரை என்ன சொல்கிறார் என்று பொதுமக்கள் அக்கறையுடன் கவனிப்பார்கள். தமிழர் நலத்திற்கான காரியங்கள் போட்டி போட்டுக் கொண்டு செய்யப்படும். அம்முறையில் நாம் அண்ணாதுரையின் வெற்றியை வரவேற்கிறோம். ஆளும்கட்சியினரும் நன்றாக வரிந்துகட்டிக் கொண்டு இவரை வரவேற்பார்கள் என நம்புகிறோம்."

—'ஆனந்த விகடன்' 17-3.57

# சட்டங்களுக்குக் கீழ்ப்படிந்து விடுக!

## கவலை தோய்ந்த முகத்தோடு இராணுவத்திற்கு சுகர்ணோ உத்தரவு

ஜகார்தா, மார்ச் 15—

"அரசாங்கத்தின் சட்டங்களுக்கும், குறிப்பாக இராணுவச் சட்டங்களுக்கும் இராணுவத்தினர் ஒழுங்காகக் கீழ்ப்படிந்துவிட வேண்டும்" என்று, இந்தோனேஷிய குடியரசுத் தலைவர் டாக்டர் சுகர்ணோ, நாடு முழுவதும் இராணுவச் சட்டத்தை பிரகடனம் செய்து வானொலியில் பேசுகையில் உத்தரவிட்டிருக்கிறார்.

இராணுவத்தினர், அரசியல் வாதிகளைப் போல நடந்துகொள்ளக் கூடாது எனவும் அவர் கேட்டுக் கொண்டிருக்கிறார்.

சுகர்ணோ, சர்வாதிகாரங்களையும் தந்து இராணுவச் சட்டத்தைப் பிரகடனம் செய்கையில், அவர் முகம் ஆழ்ந்த கவலையில் தோய்ந்திருந்தது என்று கூறப்படுகிறது !

### மந்திரி சபை அமைக்க அழைப்பு

இந்தோனேஷிய தேசீயக் கட்சியின் தலைவரான சுவிர் ஜோ என்பாரை, அங்கு மந்திரிசபை அமைக்குமாறு டாக்டர் சுகர்ணோ கேட்டுக்கொண்டதாகவும், அவரும் சுகர்ணோவை சந்தித்துப் பேசியதாகவும் தெரிகிறது.

அமையவிருக்கும் மந்திரிசபை முன்னைய மந்திரிசபையைப் போலவே இருக்குமென்றும், அச்சபையில் கம்யூனிஸ்டுப் பிரதிநிதிகள் இடம் பெறமாட்டார்கள் என்றும் அறிவிக்கப்பட்டிருக்கிறது.

### இராணுவத் தலைவர்கள் மாநாடு

இராணுவ அதிகாரிகள் அந்தந்த இடங்களிலுள்ள அதிகாரத் துறையைக் கைப்பற்றிக்கொண்டு செய்துள்ள செயல்களைக் குறித்து விவாதிக்க இந்தோனேஷிய உயர்தர இராணுவத் தலைவர்களின் மாநாடு ஒன்று கூட்டப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

இந்த மாநாடு, இராணுவ அதிகாரிகளுக்கான தலைமை அதிகாரியால் கூட்டப்பட்டுள்ளதென்றும், இம்மாநாட்டில், மத்திய சுமத்திரா மாநில இராணுவ அதிகாரியைத் தவிர மற்றவர்கள் அனைவரும் கலந்துகொண்டுள்ளதாகவும் தெரிகிறது.

### அயல்நாட்டுத் தலையீடு !

இந்தோனேஷியாவின் நற்பெயருக்குக் களங்கம் ஏற்படுத்தும் வகையில் சில அயல்நாடுகள் துஷ்பிரச்சாரம் செய்து வருவதிலிருந்து, வெளிநாடுகளின் அனுவசியத் தலையீடும் நடவடிக்கையும் தெளிவாக விளங்குவதாக ஒரு இராணுவ அதிகாரி கூறியிருக்கிறாராம்.

---

******************

# தனி அரசு

மாதமிருமுறை : விலை அணா 2.

1—4—57 முதல் சிறந்த முறையில் குறித்த காலத்தில் வரும்

★

# திராவிட சினிமா

வார இதழ் : விலை 0—1—6

20—3—57 முதல் புதன் கிழமைதோறும் வெளிவரும்

* பாக்கித் தொகைகளை விற்பனையாளர்கள் உடனே அனுப்பி வைக்கவும்.
* விற்பனையாளர் இல்லாத இடங்களுக்கு முன்பணம் கட்டக்கூடியவர் உடனே எழுதவும்

ஏ. வி. பி. ஆசைத்தம்பி
ஆசிரியர்,
தனிஅரசு, திராவிடசினிமா
திருவல்லிக்கேணி
சென்னை-5

******************

## காசா பகுதியில் கொந்தளிப்பு அடங்குகிறது?

காசா, மார்ச் 15—

இஸ்ரேல் துருப்புகளின் ஆக்கிரமிப்புக்கு முன்னர் காசா பகுதி எப்படி அமைதியாக இருந்ததோ அதே நிலைக்குத் திரும்பிவிடும் என்றும், அங்கு நிறுத்தப்பட்டிருக்கும் ஐ. நா. படையினால் அப்பகுதி நிர்வாகத்திற்கு எதும் இடையூறு விளையவில்லை என்றும் காசா பகுதி சிவில் கவர்னராகப் புதிதாக நியமனம் பெற்றுள்ள ஜெனரல் அப்துல் லதீப் குறிப்பிட்டிருக்கிறாராம்.

எகிப்தின் ஒப்புதலின் மீது ஐ. நா. நாடுகள் மேற்கொண்ட தீர்மானத்திற்கிணங்க, ஐ. நா. அவசரப்படை சமாதான நடவடிக்கைகளில் விரைவில் ஈடுபட இருப்பதாகவும் அவர் தெரிவித்திருக்கிறாராம்.

அமைதியான முறையில் தங்கள் தங்கள் வேலைகளை ஒழுங்காகக் கவனித்து வருமாறு பொது மக்களைக் கேட்டுக்கொண்ட அவர் ஐ. நா. படையினருக்குத் தங்களாலான முழு ஒத்துழைப்பையும் தருமாறு வேண்டுகோள் விடுத்துள்ளாராம்.

காசா எல்லை குறித்து கெய்ரோ நகரில் இன்னும் பேச்சு வார்த்தைகள் நடைபெற்ற வண்ணமுள்ளன என்றும் தெரிகிறது.

## பெவான் டில்லி வருகை

பிரிட்டிஷ் தொழிற் கட்சிப் பிரமுகர் பெவான் கூடிய விரைவில் டில்லிக்கு வருவார் என்று தெரிகிறது.

---

திராவிட முன்னேற்றக் கழகத்துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ., அவர்களால் அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று, (24. சூரியநாராயண செட்டித் தெரு, இராயபுரம், சென்னை) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர் : இரா. நெடுஞ்செழியன் எம்.ஏ.

